உ

சிவமயம்

# துறவி

| 1958<br>மலர் 1 | திங்கள் வெளியீடு | நவம்பர்<br>இதழ் 4, |
|---|---|---|




## தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்,
திருவண்ணாமலை.

---

"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"


பதிப்பாளர் :

சுவாமி. ஞானானந்தா.

சின்னமடம், எறும்பூர்.

வளையமாதேவி P. O. சிதம்பரம் தாலுகா.

வருட சந்தா ரூ. 2—0—0

உ

## பொருளடக்கம்:

சிவமயம்.

ஓம்

# து ற வி

---

## கடவுள் வாழ்த்து.

"அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றிற் பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம்—நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்துள் வீற்றிருக்கும்
கணபதியைக் கைதொழுதக் கால்."

"பூவார் மலர்கொண் டடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள்செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித் தொறுவின் னிரையோடு
மாமாம் பிணைவந் தணையுஞ் சாரல் அண்ணா மலையாரே."

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாய்எரியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாய்அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணுமாணும்
பிறருருவும் தம்முருவுந் தாமேயாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே."

"தூயதமிழ் நாட்டுத் துறவிகள் சங்கமென்றும்
ஞாயிறுபோன் மக்களுக்கு நன்மைசெய—தாயாகும்
உண்ணா முலையாம் உமைசே ரொளிப்பிழம்பாம்
அண்ணா மலைதுணையா மால்."

## வாழ்த்து

"அந்தண ரென்னும் அறவோர் அநுபவத்தை
இந்த வுலகோர்க் கெடுத்துரைக்க—வந்த
துறவி வெளியிடுந் தூயதமிழ் நாடுந்
துறவறமும் வாழியமா தோ."

---

உ
சிவமயம்.

# ச ம ய ம்.

பதிப்பாளர், சுவாமி, ஞானனந்தா.

"சைவசமயம்" உண்மையில் எத்தன்மைத்தென்று அறிய முயற்சிப்பவர்கள் சிலர். சைவசமயத்தின் பரந்த நோக்கத்தை யறிந்து அதற்கேற்றபடி நடவாதவர்கள் மிகப் பலர். ஆதலாற்றான் இக்காலத்தில் சைவசமயத்தைக் குறை கூறுவதற்கு இடமுண்டாயிற்று. இறைவனுடைய பொதுத் தன்மையை சைவசமயம் விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்தது போல் வேறெச்சமயமும் விளக்கவில்லை.

"அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்" என்றருளிய தாயுமானவர், சமயங்களைப்பற்றிப் பேசுமிடத்து "சைவ முதலளவில் சமயமும் வகுத்து" என்றும், "சைவ சமயமே சமயம்") என்றும் அருளிச்செய்தமையால், சமயங்களுள் முதன்மையானது சைவம் என்பது அப்பெருமானது கருத்து. எல்லாச் சமயமும் நமக்கு இணக்கமான சமயமே. சைவசமயம் எல்லாச் சமய உண்மைகளையுந் தழுவிக்கொள்ளும் முறையில் அஃது ஒரு சமயத்தையும் இகழ்வதில்லை.

"விரிவிலா அறிவினர்கள் வேருெரு சமயம்செய்தே
எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற் கேற்றதாகும்"

என்பது அப்பர் திருவாக்கு. ஒவ்வொரு சமயமும் வெவ்வேறு நிலையிலுள்ள உயிர்களின் மனநிலைக்குத் தக்கவாறு ஏற்பட்டு நிலவுதற்குக் காரணம் இறைவனுடைய திருவுள்ளமே யாதலால் படிப்படியாகப் பல சமயங்களின் உதவிகொண்டு உயிர்கள் மேலான கதியடையும் பொருட்டு அவைகளை இயக்குபவன் இறைவனே யாதலின், தாயுமான அடிகள்

"வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடும் கருத்தில்லை'

என்று திருவாய்மலர்ந்தருளினர்.

"அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்"
என்று சித்தியாரிற் கூறியதும் காண்க. பட்டினத்தடிகள்

பல சமயத்தாரும் தத்தங் கடவுளரென்று கருதி வழிபடும் வடிவங்களெல்லாம் இறைவனின் திருவிளையாட்டு வடிவங்களே யாம் என்றனர்.

அப்பனும் அம்மையுமாய் நின்ற வடிவம் நின்னதே. நள்ளிருளில் நடனம் செய்பவனும் நீயே. உளன் என்றும், இலன் என்றும் வழக்கிடுவதற்கு இடமானவனும் நீயே. போதியினமர்ந்த புத்தனும், அசோகி னமர்ந்த அருகனும் நின் வடிவங்களே என்று திருவொற்றியூர் ஒருபா ஒருபஃதுள் அறிவுறுத்தினமை காண்க. இறைவனைச் சமயாதிதன் என்ற கருத்தும் அதுவே போலும். எல்லாச் சமயங்கட்கும் முதல்வனாய் அவற்றையெல்லாங் கடந்த பெருநிலையுடைய இறைவனின் முழு இயல்பினை யறிதல் எளிதன்று; எனினும், அவ்விறைவனின் சில இலக்கணங்களைமட்டும் அறிதல் அவசியம்.

இறைவர் பிறப்பு இறப்பில்லாதவர் என்பதே சைவர் கொண்ட கொள்கை. "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று சிலப்பதிகார ஆசிரியர் இறைவனை விதந்தோதினர். பிற்காலத்துப் புலவரொருவர்,

"எல்லார் பிறப்பும் இறப்பும்இயற் பாவலர்தம்
சொல்லாற் றெளிந்தேம்நஞ் சோணேசர்—இல்லிற்
பிறந்தகதையும் கேளேம்இப் பேருலகில் வாழ்ந்துண்டு
இறந்தகதையும் கேட்டி லேம்."

என்றது காண்க. இறைவன் ஒங்கார வடிவமாய்த் தோன்றியதையும், ஐம்பூதங்களிலும் விரவி யிருப்பதையும், உருவகமாகப் பேசும் புலவர்களே பிள்ளையார் பிறப்பையும், முருகப்பிரான் பிறப்பையும் வர்ணித்தனரென்று தெளிக.

உண்மையாகப் பிறக்கும் கடவுளரைக் கடவுள் என்று வழிபடுவது சைவக் கொள்கைக்கு மாறுனதாகும். உண்மைக்கு மாறுபாடான பகுதி பிற சமயங்களிலிருந்தால் அதனை எடுத்துக் காட்டுவது இகழ்தலாகாது. சைவமொழிந்த பிற சமயங்களில் கடவுளுக்குப் பிறப்புக் கூறப்பட்டுள்ளது. பிருங்கு முனிவர் சாபத்தால் திருமால் பத்துப் பிறவி எடுத்தார் என்று வால்மீகி ராமாயணமே கூறுகின்றது. பிறப்புள்ள உயிர்கட்கும் பிறப்பில்லாத கடவுட்கும் உள்ள வேற்றுமை யறியாது சுமார்த்தமதம் கூறுகின்றது. பிறப்புடைய தெய்வங்களாகிய திருமால் அனுமார் முதலியவர்களையே மாத்துவ மதமும் வழிபடுகின்றது.

புத்த சமயத்திலே, புத்தருடைய பிறப்பு, வளர்ப்பு, இறப்புக்கள் தெளிவாக உரைக்கப்பட்டன.

சமண சமயம், தனது தெய்வத்திற்குப் பிறப்பிறப்புக் கூறுகின்றது.

கிறிஸ்தவ சமயம், பிறந்திருந்த ஏசுவைத் தெய்வமென் கின்றது.

சைவ சமயம் அவ்வித மின்மையால் அஃதொன்றே ஆத்திக மதம் என்று தெளிக.

பிறப்பில்லாத இறைவன் ஒருவனுலேயே உலகமெல்லாம் அசைகின்றது. 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' அவன் திருவருள்தான் எல்லாவற்றையும் நடத்துகின்றது.

ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் அவனது திருவருட் சத்தியே நடத்துவதால், அச் சத்தியின் ஏவலின் நின்று அச்சத்தியால் இயக்கப்பட்டு ஒவ்வொரு தொழில்மட்டும் செய்யும் தெய்வங்கள் முழுமுதற் கடவுளர் ஆகார்; ஆதலின், மும்மூர்த்திகளும் கடவுளர் அல்லர் என்று சைவசமயம் கூறுகின்றது. மும்மூர்த்திகட்கும் தலைவன் சிவபிரான் என்று சொன்னதும் அக்கருத்துக் கொண்டுதான்.

"மூவர்களும் நம்மவரே" "மூவர் கோனுய் நின்ற முதல்வன்" என்றார் மணிவாசகனார். எத்தெய்வத்தை வழி பட்டாலும் ஒழுக்கத்துடனும் அன்புடனும் வழிபடவேண்டும்.

ஞாயிறு முதலிய காட்சிப் பொருள்க ளனைத்தும் மாயா காரியமாகிய அறிவில் பொருளே. அப்பொருள்கள் அனைத்தும் அழியுந் தன்மையனவே. ஞாயிற்றின் மண்டலம் நாளடைவில் அளவு குன்றிவருகின்றதென்பது அறிவியல்நூலார் கொள்கை. ஒரு காலத்தில் அஃது இல்லாமற்போனுலும் அதன் ஒளி கொண்டு விளங்கும் உலகமெல்லாம் மாய்ந்தொழியும். அவ்வாறே எல்லாம் ஒழிந்த காலத்து எஞ்சிநிற்பது எல்லா வற்றையும் படைத்துக் காத்து அழித்தகடவுளின் திருவருளே. ஆதலால், அவ்வருளையே நாம் நாடி நிற்றல் வேண்டும். அதுவே கடவுளுடைய திருவடியை வணங்குதலாகும். கற்ற கல்வியின் பயன் அஃதே என்பது வள்ளுவர் கருத்து.

திருவருளை நாடுகின்றவர்கள் எல்லா உயிர்களிடத்தும் அருளுடையராயிருத்தல் வேண்டும்;

கடவுளுண்டென்ற கொள்கையே அருளொழுக்கத்திற்கு ஆதாரமானது. அருளொழுக்கமே எல்லா நல்லொழுக்கத்திற்கும் ஆதாரமானது.

"வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித் தோமென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்குமுள னொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு."

என்றார் குமரகுருபர சுவாமிகள்.

கடவுளுணர்ச்சி இல்லாதவர்கள் தாம் செய்யும் பிழையை ஒருவரும் அறியாமல் சுயநலத்திற்காகச் செய்தால் அவர்களைத் தடுக்கும் வழி யாதுமில்லை. ஆதலால் கடவுளை வைத்துத்தான் உலகத்தில் சன்மார்க்கத்தை நிலைநாட்ட முடியும்.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"

என்ற திருமூலர் திருவாக்கின்படி உலகத்தில் நல்லொழுக்கத்தை நிலைநாட்ட வேண்டும்.

சமணரும் புத்தரும் தென்னாட்டில் கடவுள் இல்லையென்று சொன்னதை சம்பந்தர் மறுத்தொழித்தார். தென்னாட்டில் சமணர்க்கும் சைவர்க்கும் கடவுள் வழிபாட்டைப் பற்றியே வழக்கு நிகழ்ந்தது. நமது சமய குரவர்கள் நால்வரும் கடவுள் கொள்கையை இந்நாட்டில் நிலைநிறுத்தினர்.

இறைவனை எளிதாக வழிபடுதற்குச் சாதனமாகிய உருவ வணக்கத்தையும் அக்குரவர்கள் நிலைநாட்டினர். கட்புலனாகாத அறிவைக் கட்புலனாகிய எழுத்துமூலமாகத்தான் அறிகின்றோம். அவ்வாறே காணமுடியாத கடவுளை அடையாளமாகிய வடிவ வாயிலாகத்தான் கடவுளை நினைக்க முடியும். உருவத்தின் சம்பந்தமில்லாமல் ஒன்றையும் நினைக்க முடியாது; பேசவும் முடியாது. கோபத்தைப்பற்றி நினைக்கும்போதும் மனதில் கோபக் குறியே புலனாகின்றது. அதுபோலவே, அருவமாகிய இறைவனை நினைப்பதற்கும் உருவத்தின் உதவி வேண்டும். மனதில் சோதியாக நினைத்தாலும் அதுவும் ஒரு வடிவந்தானே. மனதில் நினைவு நிலைப்பதற்கு வெளியிலுள்ள பொருள்களின் துணை வேண்டும். ஆதலால், உருவ வழிபாடு இன்றியமையாதென்பது தெளிக.

எங்கும் நிறைந்த கடவுளை ஓருருவில் வழிபடுவது குற்றமென்பாருமுளர். பூதப் பொருள்களைக் கண்டவுடன் அவற்

ரோடு கலந்துறையுங் கடவுளைக் காணும் நினைவு உண்டாவ தில்லை. தூணையுந் துரும்பையும் கண்டவுடன் கடவுளை நினைப் பவர் யார்? கடவுட்கென அமைத்த ஒரு குறியினைக் கண்ட வுடன் கடவுளுடைய நினைவு உண்டாகிறது. கடவுளை வழிபடுங் கால் உருவத்தை வழிபடுவதில்லை. உருவத்தின் வாயிலாகத் தெய்வத்தையே வழிபடுகின்றோம். சூடு எங்கும் நிறைந்திருந் தாலும் ஓரிடத்திலே கடைந்தெடுக்கும் நெருப்பே பயன்படு கின்றது.

"விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வுக் கயிற்றினல்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே,"

என்பது அப்பர் வாக்கு.

கடையான அன்புடையார்க்கு விறகில் தீபோலவும், இடை யான அன்புடையார்க்கு பாலில் நெய் போலவும், அவரினும் உயர்ந்த தலையான அன்புடையார்க்குக் கடையாத மணியில் ஒளி போலவும் இறைவன் வெளிப்படாது நிற்கின்றான். அவன் வெளிப்பட வேண்டுமாயின், அன்பு என்னும் கோலிற் பிணித்த அறிவு என்னும் கயிற்றினல் மூன்றாந் தரத்தினர் முறுக வாங்கிக் கடையவேண்டும். இரண்டாந் தரத்தினர் வாங்கிக் கடையவேண்டும். முதல் தரத்தினர் கடையவேண்டும் என்பதே தேவாரத் துட்போந்த கருத்தாகும்.

சைவ சமயத்தின் உயர்ந்த கொள்கைகளையும், விரிந்த நோக்கத்தையும் சைவர்கள் ஒவ்வொருவரும் நன்கறிய வேண்டும். திருநீறணிந்த அளவில் ஒருவன் சைவனாகிவிட மாட்டான். "மாலோ டயனறியாத வண்ணமு முள்ளது நீறு" என்ற திருவாக்கின் பொருளை ஒருவன் அறிவானாயின், அவன் உலக நிலையாமை உணர்ந்து வீடுபேற்றில் அவாவுடையவ னாவான். காடன் மாடன் போன்ற சிறு தெய்வங்களைக் கடவுளாக வழிபடுவோர் சைவராகார். "பூசணிக்காய் புடலங் காய் நீறுபூத் திருப்பதுபோல" இவர்கள் திருநீறணிந்தவ ராவார்கள்.

சிறு தெய்வங்கட்குக் கொடை கொடுப்போர் கடவுளின் சிறு வேலைக்காரர்கட்குக் கைக்கூலி கொடுப்பதுபோ லாகும். இரக்கமின்றி உயிர்ப்பலி இடுவோர் தீய பேய் வழிபாடு செய்பவ

ராவர். ஒழுககம், அருள், அன்பு முதலியன இல்லாதவர் எத் தெய்வத்தையும் வழிபடுதற்குத் தகுதியில்லாதவர் என்பதே சைவநூற் கருத்து.

சைவத்தின் விரிந்த நோக்கத்தை யறிந்தவர்கள் புறச் சமயங்களை இகழமாட்டார்கள். பல சமயங்களின் கருத்தும் சைவத்தில் ஒருங்கு இயைந்திருப்பதை யறிவார்கள். நாத்திக மதமாகிய உலோகாயத மதமும், ஒருவகை நிலையிலுள்ளவர்கட் குரியதென்பதே சைவக் கருத்து. உலக இன்பத்தை ஒருவன் அவாவிச் சென்றால் அதற்குரிய முயற்சியை அவன் செய்வான். முயற்சியின்மையினும் முயற்சியுடைமை நன்மையாதல் காண்க. முயற்சியால் உலக இன்பத்தைப் பெறுதபோது அதனை வினைக்குத் தக்கபடி நல்கியும் நல்காதும் நிற்கும் கடவுள் உண்டு கொல் என்ற ஐயவுணர்ச்சி நிகழும்.

அது ஆராய்ச்சி முடிவில் கடவுள் உண்டென்ற உணர்ச்சியை விளைவிக்கும். முயற்சியால் உலக இன்பம் பெறின், அதனை முற்றிலும் நுகர்ந்த ஒருவன் அதன் நிலையாமையையும் இழிவையுங் கண்டு அதனினும் உயர்ந்த எண்ணத்தை நாடுவன். அப்போது உயர்ந்த சமயத்துக்கு உரியவனாவான். ஆதலால், அச் சமயத்தையும் சைவம் அறவே ஒதுக்கவில்லை. அச் சமயம் நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்கு பூதங்கள் உண்டென்று கூறுவது ஒப்புக்கொண்டு அதற்கு மேலும் வான் முதலிய தத்துவங்கள் உண்டென்று கூறுவது சைவ சமயம்.

புத்த மதத்தார் அருளொழுக்கம் வேண்டுமென்று சொல் லுங்கால் அதனைச் சைவம் மறுப்பதில்லை. தானாய் இறந்ததை யும் தின்னக்கூடாதென்றே சைவசமயம் சொல்லும். அவர்கள் ஞானமே ஆன்மா என்றால், ஞானத்தையுடையது ஆன்மா என்று சைவ சமயங் கூறும்.

சமண சமயம், உயிரும் உலகும் உண்டென்று கூறுவதை ஒப்புக்கொண்டு அவற்றிற்கும் மேலாகக் கடவுளும் உண் டென்று சைவ சமயம் மொழியும். கிறிஸ்துவர்களும் மகமதியர் களும் கூறுகின்ற கொள்கைகள் சைவசமயத்திலும் உண்டு. அவர்கள் கூறாத மறு பிறவியும் சைவ சமயத்தால் ஒப்புக் கொள்ளப்பட்டதே. சில சமயங்கள் உருவ வழிபாடு வேண்டா மென்றால், அது உயர்ந்த ஞானிகளுக்கு அத்துணை அவசிய மில்லையென்று சைவசமயங் கூறுகின்றது. சில சமயங்கள்

சாதி வேண்டியதில்லை என்று சொன்னால் சைவ சமயம் சாதி முக்கியமில்லை; ஆசாரந்தான் முக்கியமென்று கூறுகிறது. இவ்வாறு ஆராய்ந்து பார்க்குமிடத்து, பிற சமயங்க ளெல்லாவற்றிலுமுள்ள கொள்கைகள் சைவசமயத்தி லிருப்பதோடு, அவற்றில் காணப்படாத அரிய உண்மைகளும் சைவ சமயத்தி லுள்ளன என்பது புலனும். இதனை யறிகின்ற சைவர்கள் ஏனை மதத்தாரோடு பகைமை கொள்ளமாட்டார்கள். சமயத்தின் உயர்வு தாழ்வுபற்றி அதனின் பிறந்தமக்களை மதித்தல் தவறு. ஒழுக்கம் பற்றியே மக்களுக்கு உயர்வு தாழ்வு ஏற்படுதல் உரியது. சைவசமயத்தில் புக விரும்பும் ஒருவன் வாழ்வினலாய செருக்கும் வறுமையாகிய சிறுமையும் இல்லாதவனு யிருப்பதோடு தாழ்வென்னுந் தன்மையுடையவனுயிருத்தல் வேண்டும்.

> ' வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ்சிறுமைதப்பி
> தாழ்வெனுந் தன்மையோடு சைவமாஞ் சமயஞ்சாரும்
> ஊ ழ்பெறலரிது''

என்பது சிவஞானசித்தியார். வாழ்வென்பது செல்வம் அதிகாரம் முதலியவற்ருலெய்துஞ் சிறப்பு. அவை இருப்பதினுல் கெடுதி யாதுமில்லை. செல்வமும் அதிகாரமும் நன்முயற்சிக்குப் பெரிதும் பயன்படுவனவே. ஆனுல், அவற்ருல் செருக்கு ஏற்படுமாயின் அது தீமைக்கே ஒருவனைச் செலுத்தும். ஆதலால் வாழ்வு என்று வாளாகூருது "வாழ்வெனுமையல்" என்ருர். வறுமையும் அதனை உணர்கின்றவர்கட்கே கெடுதி விளைவிக்கும். "செல்வமென்பது சிந்தையின் நிறைவே" என்ற வண்ணம் வறுமையால் துன்புருதவர்கள் சமயவாழ்க்கை நற்பயன் தருவதே. உண்மைத்துறவிகள் சமயவாழ்க்கையின் பொருட்டு வறுமையை மேற்கொண்டுள்ளார்கள். வறுமையால் வருந்துகின்றவர்களே தம்மையும் பிறரையும் தெய்வத்தையும் நொந்து உணவு முதலியன தேடுவதிலேயே கருத்தையும் காலத்தையும் போக்குவர். அவர்மனம் உயர்ந்த நெறியிற் செல்லாது. ஆதலின் "வறுமையாஞ் சிறுமை தப்பி" என்ருர். வறுமையினுல் பொருமையுண்டாகும். பொருமையினுல் ஒற்றுமைக் கேடுண்டாகும். ஆதலாலும் வறுமையை இடையூருகக் கூறினர்.

செல்வமில்லாத காலத்தும் தற்பெருமை பாராட்டுதலாகிய செருக்கு பலர்க்கும் உள்ளதாதலின் அது ஒழிய வேண்டு மென்பர்; 'தாழ்வெனுந் தன்மை' என்ருர். தாழ்

வென்னுந் தன்மையில்லாத விடத்து முரண்பாடுங் கலகமும் விளையும். தியதை மறப்பதும் மன்னிப்பதும் தாழ்மையுடையார்க் கெளிதாம். பணிந்த உள்ளமுடையாரே சைவசமயத்தைச் சார்ந்தவராவர் என்றமையால் உண்மைச்சைவர் யாவரும் பொருட் செருக்கு இல்லாதவர்களாய்த் தாழ்மனம் உடையவர்களாயிருக்கும் கடப்பாடுடையர்.

சமயமே நல்லொழுக்கத்தையும் நாகரிகத்தையும் காப்பாற்றுவதென்று கருதுக. நமது சமயத்தை நிலை நாட்டிய பெரியோர்களை ஆராய்ச்சி இல்லாமல் பழித்தல் கூடாது. அவர்களே நமக்கு உயிர்த்துணையாவர். அரன் மெய்யடியாரையும் ஆலயத்தையும் போற்றுக.

''சைவத்தின் மேற் சமயம் வேறில்லை
யதிற் சார் சிவமாம்
தெய்வத்தின் மேற் றெய்வமில் லென்னும்
நான்மறைச் செம்பொருள் வாய்
மை வைத்த சீர்த் திருத் தேவாரமும்
திருவாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்குள்
எம் உயிர்த் துணையே''

---

## ஞானம்.

**தவத்திரு. S. நீலகண்ட சுவாமிகள்**
ஆனந்தாச்சிரமம் சென்னை.

(முன் தொடர்ச்சி)

இத்தகைய யிலக்கணமுடைய விருத்தி ஞானமும், சொரூபஞானமும் ஞானத்தின் இருபிரிவாக முன்னர்க் கூறப்பட்டன. அப்பாகுபாடு உபாதி நோக்கா லுரைக்கப்பட்டது. உண்மைநோக்கில் எத்தகைய பேதமுமுடையதன்று. உபாதி நோக்காற் போந்த பேதம் செய்கையாகலிற் கற்பிதமே. (ஈண்டு, உபாதி யென்பது தன் சம்மந்தமுடையதில் தன் தர்மத்தினை தோற்றுவிப்பது. அல்லது அதனை வேறுபடுத்துக் காட்டுவதாம்) உண்மையாய் ஞானம்ஏகமெனிற் சாத்திரங்களிற் பிரத்தியட்சம், பரோட்சம் (அப்பிரத்தியட்சம்) நிருவிகற்பம், பரம், அபரமென்ப வாதியாகப் பலவகைப்பட அது வழங்கப்படல் என்னை? எனின்,

ஒரே ஆகாயம் தன்னுண்மைச் சொரூபத்தில் எத்தகைப் பாகுபாடு மின்றி வியாபகமாயுள்ளது. குட, மட உபாதிகளால் வரைபட்டு இக்குடாகாயஞ் சிறிது, அம்மடாகாயம் பெரிதென, அது வேறுபடுத்து வழங்கப்படல் கண்கூடு. அப்பேத வழக்கு உபாதியா லானமையிற் கற்பிதமே. அக்கற்பித பேதத்தால் அவ்வாகாயம் உண்மையில் பாகுபடாது அஃதொப்ப, ஈண்டு ஏக அத்துவித வியாபக ஞானத்திற்கு (சேதனத்திற்கு) உபாதிகள், அஞ்ஞான அல்லது அந்தக்கரண பரிணாம விகார வடிவ விருத்திகளே. அவை இயற்கையில் ஒன்றுக்கொன்று பேதமுடையன. அப்பேதம் அவற்றில் ஆரூடமான (ஏறிய) ஏக அத்துவித ஞானத் (சேதனத்)திற் றோன்றுகின்றது. அத்தோற்றம் உபாதியா லானமையிற் கற்பிதமே, அக்கற்பித பேதத்தினாலேயே பிரமை, அப்பிரமை யாதி ஞானபேத வழக்குண்டாம். சேதன சகித அவ்விருத்தி வடிவஞான பேதத்தாற் சம்ஸ்காரங் (வாசனை) களின் பேதமும், பிரமாணங் (அளவை) களின் பேதமும் பொருந்தும். கற்பித கானல் நீரால் நிலம் நனைவுறாது. அங்ஙனே கற்பித பேதத் தாற் சேதன வடிவ ஞானமும் உண்மைப் பேதத்தினையுறாது.

அந்த ஞானம் சுவப்பிரகாசமாம். அதாவது மற்றொன் றால் விளக்கப்படாது, தானே விளங்குவதாய்ப் பிறவற்றை யும் விளக்குவது அல்லது அறிவதாம். வேறொன்றால் விளக் கப்படின் அது திரிசியமாய் (அறியப்படுவதா) விடும். எதுஎது திரிசியமோ அது அது சடமாமென்பது நியமம். ஞான உபாதியாகிய விருத்தியோ, சேதன (ஞானத்) தாலறியப் படுதலிற் சடமாம். முகம்பார்க்குங் கண்ணாடியோ, குடம் போலச் சடமாம். ஆயினும், குடத்தைவிட அது சொச்சமாம். (மலினமற்றதாம்) சூரிய சந்நிதியில் அதன் பிரதி விம்பத்தை அது பெறுகின்றது. அப்பிரதி விம்பத்தால் தன்னெதிரிலுள்ள இருட்டறையிருளைச் சிறிது விலக்கி அங்குள்ள பொருளை ஒருவாறு விளக்குகின்றது. அங்ஙனமே, உபாதியாகிய விருத்தி சடமாயினும் சூக்கும பூதத்தின் சத்துவகுண காரிய மாகலிற் சொச்சமாம். **(முந்திய இதழில் அந்தக்கரணம் தூலபூத காரிய மெனத் தவறியமைந்து விட்டமையின், அதனைச் சூக்கும பூதகாரியமெனத் திருத்திக் கொள்க)** ஆகலின் ஆன்மசந்நிதியில் அதன் பிரதி விம்பத்தை அது பெறுகின்றது. அப்பிரதி விம்பத்தால், தன்னெதிர்ப்பட்ட

சடப்பொருள்களை விளக்குகின்றது. (விளக்கினை வேறு விளக்கு விளக்காமை போலச், சேதனத்தைச் சேதனமோ, அதன் பிரதிவிம்பமோ விளக்கா; சொயம்பிரகாச மாகலின்.) அக் காரணத்தால், பிரதிவிம்பத்தோடு கூடிய அவ்விருத்தியும் ஞானமென வழங்கப்படுகின்றது.

உருவமுடைய பொருள்தான் பிரதி விம்பிக்கும்; உருவமற்ற ஆன்மப் பிரதிவிம்பங் கூறலடாதெனின்; தெளிந்த கிணற்று நீரில், ஒளிரும் நட்சத்திரங்களோடு கூடி அகன்ற ஆகாயமண்டலம் பிரதிவிம்பித்துத் தோற்றுவது பிரத்தியட்சம். எனவே உருவமற்ற ஆகாயத்திற்கு எங்ஙன் பிரதிவிம்பமுண்டோ, அங்ஙன் உருவமற்ற ஆன்மாவிற்கும் பிரதிவிம்ப முண்டென்பது பொருந்தும்.

இதனை உயர்திரு மாதவச் சிவஞான சுவாமிகளும், சிவஞான பாடியம்—சூத்திரம், உ— அதிகரணம்,உ— புத்திதத்துவங்கூறுமிடத்து அதனிறுதியில், "புத்திசடமாகலின், அதன்கண் ஞானமுண்டாமென்றல்மலைவாம் பிறவெனின்,—ஆகாது புத்தி தத்துவம் சடமாயினும், சாத்துவிக குணத்தான் மேற்பட்டுத் தோன்றிய தாகலின், சேதனப்பொருளாகிய ஆன்மாவிற்கு எதிர்முகமாயவழிக், கண்ணாடியின் நிழல்போல அதன்கண் எதிர் விம்பமாய் ஞானமுண்டாதல் பொருந்துமாகலின்" என அருளிச்செய்தமை கொண்டறிக.

சொரூப ஞானம் அஞ்ஞான விரோதி யாகாவிடினும், விருத்திஞானம் அஞ்ஞானவிரோதியே.

முன்னர் நீவிர் சொரூபஞானமும் விருத்திஞானமும் பேதமற்ற ஏக சொரூபமெனக் கூறி, ஈண்டுச் சொரூப ஞானம் அஞ்ஞான அவிரோதி என்றும், விருத்திஞானம் அஞ்ஞான விரோதி என்றும் ஒன்றற்கொன்று விருத்தமுறக் கூறல் பொருந்தா தெனின்,

சூரிய கிரணம் பஞ்சு முதலியவற்றில் நேர் சம்பந்தமுற்றிருப்பினும், அவற்றினை எரிப்பதில்லை. ஆனால், அதுவே, சூரிய காந்தக் கல்லின்வாயிலாய் அவற்றிற் சம்பந்தமுறின், அவற்றினை எரித்தல் பிரசித்தம், அவ்வாறு சொரூபஞானம் நேரே அஞ்ஞான விரோதியன்று. ஆயினும் அது விருத்தியின் வாயிலாய் அஞ்ஞான விரோதியாதல் பொருந்தும்.

இதனைக் கைவல்லிய ஆசிரியரும்,

"சொரூப ஞானமும் விருத்தி ஞானமு மென்று
சோதி ஞானம திரண்டாம்,
சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த்
தோன்றும் வேறிலை மைந்தா,
சொரூப ஞான மஞ்ஞான சத்துரு வென்று
சுழுத்தியிற் கண்டாயே
சொரூப ஞானத்தின் மருவு மஞ்ஞானத்தைச்
சுடும் விருத்தியின் ஞானம்" எனவும்,

"துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாததற் சொரூபந்தானே
விருத்திஞானமாய்ச் சுட்டதெப்படி யெனில் வெய்யிலா லுலகெங்கும்
பரித்தசூரியன் சூரியகாந்தத்திற் பற்றியக் கினியாகி
எரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்கு மென்றறிவாயே"

எனவுங் கூறுதல் கொண்டறிக.

இவ்வாறு ஞானத்தின் சொரூப இயல்புகள் இயம்பப் பட்டன.

இனி, அதன் காரணங்களைப் பற்றி ஆராய்வாம். அந்தக் கரண பரிணாம (விகார) விருத்தி வடிவ பிரமை ஞானத்திற்கு உபாதானம் (முதற்காரணம்) அந்தக்கரணமாம். பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களும், இந்திரிய சையோகம் முதலிய வியாபாரங்களும் நிமித்தகாரணமாம். ஈண்டு வியாபாரமென்பது அதனிற் றோன்றி அதனாற் றோன்றற்பாலதனைத் தோற்றுவிப்பது. அது கட்பொறிக்கும் குடத்திற்குமுள்ள சையோகம், கண்ணினின்று முண்டாய் அக் கண்ணாலுண்டாங் குடஞானத்தினை உண்டாக்குவது போலாம். இரண்டு குணிகளுக்குண்டாம் நேர் சம்பந்தத்தினைச் சையோகமென்பர். துணைக்காரணம் என் கூறவில்லையெனின், வேதாந்த மரபுப்படி துணைக்காரணத்தை நிமித்தத்தி லடக்கிக் கூறல் வழக்காகலின் என்க.

பின்னர், விவகார யோக்கியமான விருத்தி ஞானத்தின் செயற்கைப் பாகுபாடுகளும் அவற்றின் சொரூபாதிகளும் சொல்வாம். அவ்விருத்தி ஞானம் பிரமை, அப்பிரமை யென இரு பிரிவிற்று. அவற்றைப் பற்றிப் பற்பல ஆசிரியர்கள் பற்பல வாறாகப் பகர்ந்துள்ளார்கள்.

ஓராசிரியரோ, பிரமாணத்தி(அளவை)னாலுண்டாமுண்மை ஞானத்தினைப் பிரமை யெனவும், அஃதல்லாததை அப்பிரமை எனவுங் கூறுகின்றார். அக்கொள்கைப்படி பிரத்தியட்சம், அனுமானம், சத்தம், உவமானம், அர்த்தாபத்தி, அனுபலப்தி என்பன ஆறும் பிரமாணங்களாம். அவற்றாலுண்டாம்

ஞானம் ஆறும் பிரமைகளாம். பிரமாணத்திஞலாகாமல், மற்றைக் காரணங்களாலாயின், அதுஅப்பிரமையாம், ஈசுரஞானம் (முற்றறிவு) மேற்கூறிய எப்பிரமாணத்திஞலு ,மாகாமல்: மாயை யாகிய உபாதானம் சிவர்களின் கர்மமாகிய நிமித்தம் என்பவற்ரு லானமையின் அப்பிரமையாம்.

அப்பிரமை ஞானம், யதார்த்தம், அயதார்த்தம், என இருவகையாம். மேற்கூறிய ஈசுரஞானம் யதார்த்த அப்பிரமையாம். என்னே? பிரமாணத்தாலும் தோஷத்தாலு மாகாமல் பிற காரணத்தாலானமையின் என்க. அயதார்த்த அப்பிரமை, பிரமாணத்தாலாகாமல் தோஷத்தா லுண்டாவது. சுத்தியில் வெள்ளி ஞானம் ஒப்புமைத் தோஷத்தாலுண்டானமையின் அயதார்த்த அப்பிரமையாம் (பிராந்திஞானமாம்)

தொடரும்.

---

# செயற்கருஞ் செயல்.

வெ. ரா, கந்தசாமி யடிகள்,
உடுமலை, தமிழ் வித்வான்,
கர்ஞமிர்தம். சாந்தலிங்க சுவாமிகள் மடம், பேரூர்.

"செயற்கருஞ் செய்கை செய்த தீரனே"

என்று பெருமான் அழைத்ததாக ஒரு அடியவரை சேக்கிழார் பெருமான் உலகத்திற்குக் காட்டுகிருர். அவர் யாவர்? அவர் செயல் யாது? என்பதைப் பின் ஆராய்வாம். முதலில் அழைத்த அவ்விறைவன் நிலையை ஒரு சிறிது ஆராய்வோம்.

'இறைநிலை'—

"பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளம்
தன்னிலந் தரத்திற்சிவ சாக்ஷிமாத் திரமாய் நிற்கும்"

என்று கூறுகிறது கைவல்யம். இது முறையே நிரைநிரைப் பொருளாக இரு பிரிவுடைத்தாய், பொன் ஆசை பொருந்தினர், மண் ஆசை பொருந்தினர், பெண் ஆசை பொருந்தினர் என்றும், பொன் ஆசை பொருந்தார், மண் ஆசை பொருந்தார், பெண் ஆசை பொருந்தார் என்றும் ஆகிய இருதிறப்பட்டமக்களிடத்தும், ஆகாயம் எல்லாப் பொருளிடத்தும் வியாபித்திருப்பதுபோல் இறைவன் எப்பொருளிடத்தும் வியாபித்திருப்பவன் என்று கூறுகிறது. மேற்சொல்லிய இறை நிலையை

அப்பரடிகள்,

"விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்"

என்று மூன்று வகைப்படுத்திக் கூறுகிறார். அதாவது, விறகில் தீயானது மிக அதிசூக்குமமாயுள்ளது; பாலில் நெய் சூக்குமமாயுள்ளது; மணியில் ஒளி மறைந்துள்ளது. முறுக வாங்கிக் கடைய தீ வெளிப்படுதல்போல் மும்மல சகிதராகிய சகலர்க்கு, கல்வி, கேள்வி, உபதேசம், ஜெபம், தியானம், பூசை முதலியவற்றால் இறைவன் வெளிப்பட்டு அவர்களது மலத்தைப் போக்கி அருள் செய்வான். இருமலமுடைய பிரளயாகலருக்கு, வாங்கிக் கடைய பாலில் நெய் வெளிப்படுதல் போல் கல்வி, கேள்வி, குரு உபதேசம், பூசாதிகளால் இறைவன் வெளிப்பட்டு அவர்களது மலத்தைப் போக்கி அருள் செய்வான் மற்றும், ஒரு மலமுடைய விஞ்ஞானகலருக்கு, மணி கடைய ஒளிவிடுதல்போல அன்பினால் பூசித்த அளவில் இறைவன் வெளிப்பட்டு அருள் செய்வான்

மும்மலம் என்பது முறையே ஆணவம், மாயை, கன்மம். ஆணவம், மாயை, ஆணவம். இவை மூவகை ஆன்மாக்களையும் பந்தித்து நிற்கும்.

இவ்விறை நிலையை மணிவாசகனார்,

"சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள் வெண்ணீற்றாய்"

என்றும், பின்னும்

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோய்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்"

என்றும் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்.

இத்தகைய இறைவன், மேற்சொல்லி "செயற்கரும் செய்கை செய்த தீரன்" மாட்டு யாது செய்து அவரை ஆட்கொண்டான் என்பதே இக்கட்டுரையின் பொருள் ஆகும். இக்கட்டுரையிற் காணும் அடியவர் இயற்பகையார். அடியார் பெருமையைக்கூறுவது சேக்கிழார்க் கல்லது தேவர்க்கும் அரிதே என்பார் உமாபதிசிவம். அவர் சரிதத்தில் நமது சிற்றறிவு கொண்டு சிறிது ஆராய்வோம்.

இவ்வியற்பகையார் பூம்புகார் நகரத்தில் வணிகர் குலத்தில் பிறந்து இல்லறம் இனிது நடாத்தி வந்தனர். சிவனடியார்கள் யாவரேனும் பேதம் பாராது அவர்கள் வேண்டிய பொருள் யாதேனும் கொடுக்குஞ் சிந்தையராய் வாழ்ந்து வந்தனர். இவரது உயரிய நிலையை உலகத்துக்கு அறிவிக்கவே,

"ஆயு நுண்பொருளாகியும் வெளியே
அம்பலத்துள் நின்ருடுவார்"

ஆகிய இறைவன் ஓர் அடியவராகி வருகின்ருர். வந்த அடியவரை இயற்பகையார் வரவேற்று உபசாரஞ் செய்து வணங்கினுர். வந்த அடியவர் இயற்பகையாரை நோக்கி, நீர் அடியவர் யாது வேண்டினும் மறுக்காது கொடுப்பவர் என்பது கேட்டு உம்மிடம் ஒன்று வேண்டிவந்தோம்; தடையின்றி கொடுக்க வல்லிரோஎன்ருர். அடியவர் வார்த்தையைக் கேட்ட இயற்பகைப்பார், அடியேனிடத்து உளதாவதொன்றைக் கேட்பிரேல் கொடுப்பேன், தேவரீர் விருப்பம் யாதோ? சொல்லும் என்ருர். அதற்கு இறைவனுர் உமது மனைவியை வேண்டி இங்கு வந்துள்ளோம் என்ருர். இவ்வார்த்தையைக் கேட்ட இயற்பகையார் முன்னிலும் மகிழ்ந்தவராய் அடியேனிடத்து உள்ளதையே கேட்டு என்னை உய்வித்தீர் என இன்புற்று மனைவியினிடத்துச் சென்று இந்த அடியவர்க்கு உம்மைக் கொடுத்தேன் அவர்பின் போதுக என்ருர். அவள் சிறிதே மனங்கலங்கிப் பின்பு தெளிந்து கணவனுரைப்படி நடப்பதே கற்புக்கடன் என்று நாயகனைப் பணிந்து பின் வந்த அடியவராகிய இறைவனையும் பணிந்துநின்ருள்.

வந்த அடியவர் இயற்பகையாரை நோக்கி, நான் இப்பதி கடக்கும்வரை நீர் துணையாக வரவேண்டும் என்ருர்.

இயற்பகையார் ஆ! இது தேவரீர் சொல்வதற்கு முன்னமே செய்யக்கடமைப்பட்டவன்; நீர்சொல்லும்வரை தாழ்த்து நின்றது எனது பிழை என்று பதறி போர்க்கோலம் பூண்டு புறப்பட்டார்.

இம்மைக்கும் மறுமைக்கும் வழித்துணையாயுள்ள பெருமானுக்கு இவர் வழித்துணையாய்ப் போவது ஆச்சரியமல்லவா.

தொடரும்

# பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகை

# திரு. வி. க.

---

தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கத் தலைவர்
குக. சதாசிவ அடிகள்,
அம்மநகர், சங்கேந்தி.

தொன் மதுரைக் கல்யாணசுந்தரனைச் செந்தமிழைச் சொன்மதுரக் கல்யாணசுந்தரனுந் தூயவன் நன்மதுரப் பாவாணர் முதல் தொழிலாளர் ஈருகப் பல்லோரும் போற்றிக் கூறக் காட்சியளித்த செந்தமிழண்ணல், இவ் விசய ஆண்டு புரட்டாசித் திங்கள் க (17—9—53) ம் நாள் வியாழக்கிழமை மாலை எக–ம் அகவைத் தொடக்கத்தில் நம்மை விட்டுப் பிரிந்தார். இவர் நாட்டுக்கும், மொழிக்கும், தமிழர் பண்பாட்டுக்கும் செய்த தொண்டுகள் அளப்பரியன. முக்கியமாக நாட்டின் பெருக்கத்துக்கேற்ற தொழிலாளர் தந்தையாக விளங்கினர். அத் தமிழ் முனிவர் செய்த நூற்கள் பலவாகும். அச் சமரச ஞானியை முப்பத்தைந்து ஆண்டுகட்கு முன் புதுவைக் கலைமகள் கழகத்தில் காணப்பெறும் பேற்றைப் பெற்றேன். மதுரங் கலந்த வீர உரைகள் என் செவிகளை ஈர்த்தன. சிந்தை தோயும் ஐம்பொறிகளும் செவிகளாம் புலன்களைந்தும் ஓசையா யிருந்தனன்; வியப்பு முற்றேன். அன்று முதல் அவ் வந்தணாளன் அரும் பேச்சை எண்ணி யெண்ணி மகிழ்வேன். அரசியற்றுறை, சமயத் துறைகளில் அச் சீரிய சிந்தனையாளர் தலைமையில் பன்முறை பேசும் வாய்ப்புக் கிட்டியது. யான் எழுதிய 'தமிழ்ப் பூங்கொத்து' என்ற நூலுக்கு மதிப்புரையும் எழுதியுள்ளார்கள். அத் தமிழ்த் தலைவர் மறைந்தது தமிழர்களுக்கு ஈடுசெய்ய முடியாத ஒரு பெருங்குறையேயாகும்; அவர் ஆன்மா சாந்தி உறுவ தாகுக.

17—10—'53 }
சாது நிலையம், பழநி. } திரு. வி. க. புகழ் ஓங்குக.

---

Printed By Rm. Natarajan Chettiar, at Pandian Press, Chidambaram.
Edited and Published by Swami Gnanananda "Chinnamadam", Erumbur.